# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஹேவிளம்பி – கார்த்திகை – 2017 – நவம்பர்

2.11.2017 அன்று கோவிலூர் ஆண்டவர் உடற்கல்வியியல் கல்லூரி முன்னர் தவத்திரு கமலாத்மானந்தா மஹராஜ் அவர்கள் தெய்வத்திரு நாச்சியப்ப சுவாமிகளின் திருவுருவச்சிலையைத் திறந்துவைத்த நிகழ்ச்சி முன்னிலை கோவிலூர் ஆதீனம்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஹேவிளம்பி - கார்த்திகை - 2017 - நவம்பர் இதழ் - 65

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. ம. கார்மேகம்

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்



# இறை வணக்கம்

மின்னிடையாள் கார்குழலாள் புவனம் காக்கும்
மேகவண்ணன் தங்கையென வந்தாள் மங்கை
மேனைக்கு மகளானாள் கயிலை வாசன்
தன்னுடைய மேனியிலே பாதி கொண்டாள்
தாமரையாள் கலைமாது பணிய நின்றாள்
தமிழ்பாடும் பிள்ளைக்குப் பால்கொடுத்தாள்
மன்னவனும் சந்ததிக்காய்ச் செய்த வேள்வி
மகளானாள் மாமதுரை நகரை ஆண்டாள்
மாகயிலை ஈசனுடன் வாது செய்தே
அன்னவனைத் தன்னுடைய பதியாய் ஏற்றாள்
அவள்தானே திருநெல்லை நாமம் பூண்டாள்
அவளடியை வணங்கினார் அமைதி காண்பார்!

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்**

நம்மில் பலர் சந்தர்ப்ப வசத்தாலோ, செல்வச்செழிப்பாலோ, அலட்சியத்தாலோ, அகங்காரத்தாலோ மற்றும் அஞ்ஞானத்தாலோ பல தவறுகளையும், பிழைகளையும், பழி ஏற்படக்கூடிய செயல்களையும் செய்து, அந்தக் கர்ம வினையின் காரணமாக மனத்தளவிலும் உடல் அளவிலும் துயர்ப்பட வேண்டிய நிலை ஏற்படுகின்றது. பெரும் பாவங்களைச் செய்தவர்கள் தாம் செய்தவை, பழி பாவங்கள் என்று ஒரு காலகட்டத்திலே தெளிவு பெறுகின்றபொழுது மனதளவிலே பெரிதும் பாதிக்கப்படுகின்றார்கள். அப்படிப்பட்ட பாவிகளுக்கு அஞ்சேல் என்று நீங்களும் நற்கதி பெற இன்றும் வாய்ப்பிருக்கிறது என்ற நம்பிக்கை, ஆறுதலைத் தரக்கூடிய வரலாறு சசிவண்ணபோதம்.

சசிவண்ணபோதம் கோவிலூர்த் திருமட வேதாந்த மரபில் கற்பிக்கப்படும் நூல்களுள் மூன்றாவது பாடம் ஆகும். இந்நூல் தத்துவராய சுவாமிகள் என்பவரால் எழுதப்பெற்றது. கோவிலூர் பாடத்திட்டத்தில் 16 நூல்களுள் இம்மகான் எழுதிய நான்கு நூல்கள் பாடமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன. அவை (3) சசிவண்ணபோதம் (11) அஞ்ஞவதைப்பரணி (13) ஈசுவர (14) பிரம்மகீதை ஆகியவை ஆகும்.

ஒரு ஜீவன் எவ்வளவு கொடிய பாவங்களை, காமக் கொடூரங்களை, படுகொலைகளைச் செய்தவன் ஆக இருந்தாலும் இறையருளாலே அவனுக்கு ஒரு ஞானி குருவாகக் கிடைக்கப்பெற்று அவரின் பூரண அருள் கிடைக்குமே ஆனால் அவனுடைய பாவங்கள் அனைத்தும் - பிராரப்த கர்மவினை உட்படப் பறந்துவிடும் என்ற சித்தாந்தத்தை விளக்குவதற்காகச் சொல்லப்பட்ட வரலாறே சசிவண்ணபோதம் ஆகும். சசிவண்ணன் என்றால் வெள்ளை நிறத்தவன் என்று பொருள். நோயின் வீரியத்தாலே வெண்மை நிறம் ஆனவன். குருவின் அருளாலே போதம் / அறிவு, ஞானம் பெற்றவன் என்று பொருள்படும்.

சசிவண்ணன் என்பவன் தன்னுடைய வாழ்க்கையிலே தர்ம நியாயங்களை மீறிச் செய்யக்கூடாத அத்துணை தீய செயல்களையும் செய்து வலிமையான நோய்கட்கு ஆட்பட்டுத் தளர்ந்து போனவன். இவனுக்கு ஏற்படாத நோய் எதுவும் இல்லை என்னும் படிக்கு அனைத்து நோய்களாலும் தாக்கப்பட்டவன். இவன் செய்யாத பாவம் இல்லை

எனும்படியாக மது, மாது, சூது, கொள்ளை, துரோகம், ஏமாற்றிப் பிழைத்தல் என அனைத்தையும் வாலிபமும் வலுவும் உள்ள காலத்துச் செய்து பெரும் நோய்களால் பீடிக்கப்பட்டுச் சிரமத்தில் உழன்றான். இவன் செய்த பாவங்களால் சொர்க்கத்தில் இருந்த இவனது முன்னோர்கள் அனைவரும் நரகத்திற்குத் தள்ளப்பட்டனர். ஒருவன் செய்த பாவம் ஏழேழ் தலைமுறையையும் பாதிக்கும் என்பதற்கு நல்ல உதாரணம் சசிவண்ணன்.

இவன் படுகின்ற துயரைப் பார்க்கச் சகிக்காத இவனுடைய தந்தை, பெற்ற கடனுக்காக இவனை எப்படியாவது கடைத்தேற்ற வேண்டும் என்று இவனைக் கூடையில் வைத்துச் சுமந்து எட்டுத் திசைகளிலும் வழி தேடி அலைந்தான். அப்போது ஒரு மாதவர் சத்தீச்சுரம் என்னும் புண்ணியத் தலத்திலே நந்திபாராணயர் என்னும் ஒரு ஞானி உள்ளார். அவரால் உன் மகன் துயரைத் துடைக்க முடியும் என்று ஆற்றுப்படுத்தினர்.

தந்தையும் நந்திபராயணர் சந்நிதானத்திலே தன் பாரத்தை இறக்கிவைத்து ஐயனே இவன் செய்த பாவங்களைத் தங்கள் திருமுன்பு உரைத்தலே பாவமாகும். இவன் உங்கள் சரணம். இவனைக் காப்பாற்றுங்கள் என்று வேண்டிக் கொண்டு அகன்றான்.

ஞானகுருவின் கருணாகடாட்சமான அருட்பார்வை பட்டதுமே இவனுடைய நோய்களின் கடுமை நீங்கியது. பின்னர் இவன் நல்ல புத்தி வந்து அவரைப் பூரணமாகச் சரண் அடைந்து அவர்க்குத் தொண்டு செய்து சாத்திரம் கற்று ஞானம் பெற்று நற்கதி அடைந்தான் என்பது வரலாறு.

குருவின் அருள் மூன்று படிகளாகக் கிடைக்கும். நயனதீட்சை, ஸ்பரிச தீட்சை, உபதேச தீட்சை என மூன்று வகைப்படும். அருள் விழிப் பார்வையின் தீட்சண்யத்தால் நோயின் கடுமை நீங்கியது. பின்னர் தொண்டின் மகிமையால் ஸ்பரிச தீட்சை பெற்று நோய்கள் நீங்கின. அஞ்ஞானமும் நீங்கியது. உபதேச தீட்சையாலே நல்லறிவு, போதம் பெற்று அவரைப்போற்றி வாழ்ந்து வீடு பேறு பெற்றான். இவன் முன்னோர்களும் நரகம் விட்டு மீண்டும் சொர்க்கம் எய்தினர்.

உவமிப்பின் ஞானி விழிபட்டு முன்னை
வினை விட்டு முக்தி உலகில்
தவம் அற்ற வெய்ய வினையே புரிந்து
சசிவண்ணன் எய்து கதையே.

***ஆசீர்வாதங்கள்!***

***ஸ்ரீ சற்குருநாதன் துணை***

# பட்டினத்தார் பைந்தமிழ் - 12

தமிழாகரர் தெ. முருகசாமி
(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

பைந்தமிழ்ப் பட்டினத்தடிகள் சிதம்பரத்தையும் சீர்காழியையும் சித்தமுடன் போற்றிப் பரவியபின் திருவிடை மருதூர் என்னும் பழம் பெரும் தலத்தில் எழுந்தருளியுள்ள மகாலிங்கப் பெருமானைப் பாடிப் பரவும் பனுவல் பொருளைக் காண்போமாக!

காவிரிக் கரையின் தென்பால் திகழ்வது திரு விடைமருதூர் திருத்தல மாகும். இது மத்தியார்ச் சுனம் என்ற வடமொழிப் பெயரால் அறியப்பட்ட தலம்.

அருச்சுனம் என்றால் மருதுமரம். மருதுமரத்தைத் தல விருட்சமாகக் கொண்ட திருத்தலம் மூன்று உள்ளன. வடநாட்டில் திருப்பருப்பதம் என்னும் சீசைலமாம் மல்லிகார்ச்சுனம் ஒன்று.

தென்னாட்டில் பாண்டி மண்டல அம்பா சமுத்திரத்திற்கு அண்மையுள்ள திருப்புடை மருதூர் என்னும் புடார்ச் சுனம் இரண்டாவதாகும். சோழ மண்டலத்தின் திருவுடை மருதூராம் மத்தியார்ச்சுனம் மூன்றாவதாகும்.

தேவாரப் பாடல் பெற்ற இத்திருவிடைமருதூர், தஞ்சையில் உள்ள இராசேசுரத்து இலிங்கத்தினும் பெரிதுடைய சிறப்புக் குரியது. இதனை மகாலிங்கம் என்பர். இத்தகு சிவனை வணங்கிப் போற்றும் பட்டினத்தார் மகாலிங்கத் திருமேனிக்குள் சக்தி சொரூபமும் அடங்கியுள்ளதாகக் கருதி மாதொரு பாகராகப்பாடுகிறார்.

இருவயின் உருவும் ஒருவயிற்றாகி - என்பது பட்டினத்தார் வாக்கு! ஆண்பெண் சேர்ந்த அர்த்தநாரித் தோற்றத்தையே அவர் இருவயின் உரு என்றார்.

ஆன்மாக்களின் உலகியல் வாழ்வு நிகழ்தல் பொருட்டு இறைவன், ஆண் பெண் வடிவினனாய்த்தன்னைச் சிவன் என்றும் தன் ஆற்றலைச் சக்தி என்றும் காட்டிக் கொள்கிறார். இப்படி இருவேறு நிலையை ஒருருவிலிருந்தே காட்டுவதென்பது சிவபெருமானுக்கே

உரியதாகும். இதனைத்தான் மணிவாசகர் தொன்மைக் கோலம் என்றார்.

*தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்*
*பால் வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்*
*சூலமும் தொக்க வளையும் உடைத்தொன்மைக்*
*கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ!*

இத்திருவாசகப் பாடலின் விரிவுரை போலப் பட்டினத்தார் திருவிடை மருதூர் மும்மணிக்கோவை முதல் பாடலைப்பாடியுள்ளார்.

தெய்வத் தாமரை எனத்தொடங்கும் அப்பாடலில் சிவசக்தியரின் திருவடி முதல் திருமுடி வரையான உறுப்பு நலங்கள் ஒவ்வொன்றாகத் தனித் தனியே பிரித்துப் பாடப்பட்டுள்ளன.

1. ஆண்பாகமாகிய சிவன் திருவடியானது தாமரை போன்ற அழகியதாய், வீரக் கழல் அணிந்ததாய் பச்சிலையிட்டு வழிபடுவார்க்கு முத்திப் பயன் கொடுப்பதாய் உள்ளது.

அவ்வாறே பெண்பாகமாகிய சக்தியின் திருவடியானது கற்பக மலர், அனுச்சமலர் போன்றவற்றினும் மெல்லியதாக உள்ளது.

2. சிவனது பாகத்தின் இடுப்பில் புலியாடையும் பாம்புக் கச்சும் உள்ளன. சக்தி இடுப்பில் செம்பட்டாடையுடன் மேகலையும் உள்ளன.

3. சிவத்திருமேனியில் ஆமை ஓடும் பன்றிக்கொம்பும் எலும்பு மாலையும் உள்ளதோடு திருநீற்றுப் பொலிவுடனும் திகழுகிறது. சக்தியின் மேனியில் ஆன்மாக்கள் உய்ய வேண்டி அருளுதற்கான ஞானப் பாலேந்தும் மார்பும் முத்து மாலையும் திகழ்கின்றன.

4. சிவனார் திருக்கரத்தில் முத்தலைச் சூலமும் மழுவும் உடுக்கையும் உள்ளன. சக்திக்கரத்தில் வளையலும் பந்தும் கிளியும் உள்ளன.

5. சிவனின் வலக்கண் சூரியனாகவும் சக்தியின் இடக்கண் மான் போன்றதாய் உலக உயிர்களைக்காக்கும் பொருட்டு நீலோற்பவ மலரின் அழகுடன் உள்ளது.

6. வலப்பக்கச் சிவனார் திருமுடியில் நொச்சியும் ஊமத்தம் மலரும்

கொன்றை தும்பைப் பூக்களும் உள்ளதோடு ஆகாய கங்கையும் பாம்பும் பிறையும் சூடியதாகவும் நெருப்பு போன்று சிவந்த சடையும் கொண்ட தாய்ப் பிரமனால் காணமுடியாததாகவும் உள்ளது.

சக்தியின் இடப்பாகத் திருமுடியில் தெய்வக்கற்பகப் பூமாலையுள்ளது. இவ்வாறான இருவேறு காட்சியானது மனத்தை விட்டு அகலாததாக உள்ளதாய்ப் பட்டினத்தார், இனைய வண்ணத்து நினைவரும் காட்சி எனப் பரவசப்படுகின்றார். மேலும் பிறவிவேண்டாம் என்ற வேண்டுதலோடு பாடலை முடிக்கின்றார். இது போல் அடையாளம் சுட்டி எவரும் பாடவில்லை என்றே கூறலாம்.

*மருதிடம் கொண்ட ஒருதனிக் கடவுள்நின்*
*திருவடி பரவுதும், யாமே நெடுநாள்*
*இறந்தும் பிறந்தும் இளைத்தனம் மறந்தும்*
*சிறைக்கருப் பாசயம் சேரா*
*மறித்தும் புகாஅ வாழ்வுபெறற் பொருட்டே.*

பிறந்த உயிர் பிறவாமை ஒன்றையே வேண்டும், பிறந்து வளர்ந்து வேதனைப்பட்ட அனுபவத்தால், சிறைச்சாலை போனவரும் மருத்துவச் சாலை போனவரும் மீண்டும் அந்த இடங்கட்குப் போக விரும்பாததைப் போலத் தம்மைப் பக்குவப்படுத்திக் கொள்ளும் ஆன்மா மீண்டும் பிறவியாம் கருக்குழியில் செனிக்காதவாறு திருவடிப் பேற்றை விரும்பும் என்பதைப் பாடலின் பயனாகக் கூறினார் அடிகளார்.

சிறைக்கருப்பு ஆசயம் என்பது சிறை போன்ற கருப்பைப்பை என்பதாகும். ஆசயம் என்றால் உடலின் உட்பை; அது தான் உயிர்கருக்கொள்ளும் கருப்பையாம் என்க.

இப்படியாக முதல் பாடலில் பிறவி வேண்டாம் என்றதையே 4ஆம் பாடலிலும் யான் இனிப் பிறத்தல் ஆற்றேன் என அழுது தொழுது பாடுகிறார். இங்ஙனம் வேண்டுதற்குப் பிறப்பின் துன்பமே காரணமாகும். அதாவது பிறக்குங்கால் நான்படும் துன்பமும் தாய்படும் துன்பமும் சொல்லி மாளாததாய் உள்ளதோடு இறக்கும் போதும் வாதனை மிகுதியாம் எனப் பட்டினத்தார் தாம் உலகியலில் கண்ட அனுபவத்தைக் கீழ்க்கண்டவாறாகப் பதிவு செய்கிறார்.

*தோற்றும் பொழுதின் ஈற்றுத் துன்பத்*
*தியாயுறு துயரமும் யானுறு துயரமும்*
*இறக்கும் பொழுதின் அறப்பெருந் துன்பமும்*
*நீயலது அறிகுநர் யாரே! அதனால்*
*யான்இனிப் பிறத்தல் ஆற்றேன்.*

பட்டினத்துச் சுவாமிகள் இப்பாடலில் பிறப்பையும் இறப்பையுமே துன்பம் என்றது சிந்தனைக்குரியதாகும். பிறக்கும் போது குழந்தையும் தாயும் துன்பம் அடைகின்றனர். இறக்கும் போதோ ஆன்மா மட்டுமே துன்பம் அடையுமாம்; இறக்கும் போதுள்ள துன்பத்தைப் பலர் பாடியுள்ளனர். சாதலின் இன்னாத தில்லை - எனத் திருவள்ளுவர் (230) கூறினார். திருப்போரூர் சந்நிதி முறைநூலில் சிதம்பர சுவாமிகள் இறப்பின் வாதனை வேதனையைக் கீழ்க்கண்டவாறு கூறியுள்ளார்.

*நோயில் தளராமல் நொந்துமனம் வாடாமல்*
*பாயில் கிடவாமல் பாவியேன் - காயத்தை*
*ஓர் நொடிக்குள் போக்கியே ஒண்போரூர் ஐயாநின்*
*சீர் அடிக்கீழ் வைப்பாய்த் தெரிந்து.*

ஆக பிறப்பிறப்பான துன்பங்களிலிருந்து விடுதலையடைய மருதீசரைப் பற்ற வேண்டும் என்கிறார் பட்டினத்தார். ஏனெனில் இத்துன்பங்களை மருதீசரே நன்குணர்வார் என்பதால் நீயலது அறிகுநர் யாரே என்றார்.

இத்தகு வல்லமை தரும் மருதீசரைக் கருதி வாழ்வார்க்கு உடலைவிட்டு உயிர்நீங்குமுன் வாதனை இராது என்கிறார். ஏனெனில் எல்லாவற்றிற்கும் மருதீசரே கதியாக இருப்பதால் எனக் காரணம் கூறுகிறார். பட்டினத்தார்.

*கதியா வதுபிறி தியாதொன்றும்*
*இல்லை, களேபரத்தின்*
*பொதியா வதுசுமந் தால்விழப்*
*போமிது போன்னபின்னர்*
*விதியாம் எனச்சிலர் நோவதல்*
*லால்இதை வேண்டுநர்யார்?*

*மதியா வதுமரு தன்கழ*
*லேசென்று வாழ்த்துவதே!*

சுமையான உடல் வீழ்ந்தழியும். அங்ஙனம் வீழ்ந்தபின் உடலை விரும்புவோர் யாவர்? ஆதலால் இவ்வுடல் வீழா முன் மருதவாணர் திருவடியை அணைந்து வாயார வாழ்த்தித் தொழுவதே நல்லறிவாகும் என்பது இப்பாடல் பொருளாகும், களேபரம் என்பதற்கு உடல் என்று பொருள். எலும்பு, தசை, தோல், நரம்பு, குருதி, நகம், முடி எனப் பலவற்றைச் சுமந்த பொதியேகளேபரம் ஆம் என்க!

இத்தகு நல்லறிவுடன் மருதூர் ஈசனை வழிபாடு செய்வதற்குச் செல்வமும் புகழும், அருளும் கிட்டுமாம் என்கிறார் பட்டினத்தார்.

*பொருளும் குலனும் புகழும் திறனும்*
*அருளும் அறிவும் அனைத்தும் - ஒருவர்*
*கருதாஎன் பார்க்கும் கறைமிடற்றாய் தொல்லை*
*மருதா என் பார்க்கு வரும்.*

யாரும் விரும்பாத எலும்பு மாலையை அணிந்திருக்கும் மருதவாணனே எனக் காதலால் கசிந்து வழிபட்டால் அனைத்தும் கிட்டும். இந்நற்பேறுகளின் வழி, உலகில் இறந்தும் பிறந்தும் துன்பம் அடைய மாட்டேன் என்றும் பொறி புலன்களின் வழி தீமையைச் செய்ய மாட்டேன் என்றும் நரகமும் அடையேன் என்றும் உறுதியாகக் கூறுகின்ற பட்டினத்தார், இனிமேல் யாரிடமும் சென்று எந்த ஒன்றையும் இரந்து வேண்ட மாட்டேன் என்றும் அறுதியிட்டுக் கூறுகின்றார்.

இதனால் அறியப்படுவது யாதெனில் ஆன்மாவின் அழுத்தமான பக்தியால் ஆண்டவன் தவறாமல் பலன்களைத் தருவான் என்ற உண்மையைத் தெரிந்து கொள்ள முடிகிறது.

*வருந்தேன் இறந்தும் பிறந்தும்*
*மயக்கும் புலன்வழிபோய்ப்*
*பொருந்தேன் நரகில் புகுகின்றி*
*லேன்புகழ் மாமருதில்*
*பெருந்தேன் முகந்துகொண் டுண்டு*

*பிறிதொன்றில் ஆசையின்றி*
*இருந்தேன் இனிச்சென் றிரவேன்*
*ஒருவரை யாதொன்றுமே!*

இப்பாடலில் ஆன்மாவின் அழுத்தமான பக்தி வைப்பது எவ்வாறு என உணர்த்தப்பட்டுள்ளது. திருவிடை மருதூரில் பிறவிநோய் அகற்றுதற்குரிய மருந்தான தேனாய் உள்ள இறைவனை அறிவுக்கண்களால் முகந்து உண்டு யாதொரு பற்றில்லாமல் பக்திப் பற்றொன்றினால் மட்டுமே வாழும் போது பிறஎவரிடமும் எதையும் வேண்டிப் பெறும் விருப்பம் ஏற்படாது என்பதே ஒருதெய்வ வழிபாட்டுப் பக்தி என்கிறது இப்பாடல்,

ஆக திருவிடை மருதூர் மும்மணிக்கோவையில் ஒருதெய்வ வழிபாட்டை வலியுறுத்துவதாகப் பட்டினத்தாரின் கொள்கையை உணர முடிகிறது எனலாம். இங்ஙனம் உணரும் தொடர்ச்சியில் இனி வாழ்வின் பரிமாண உண்மைகளை அவர் உணர்த்தும் வழி உணர்வோமாக!

*(தொடரும்...)*

## தேடுங்கள் கண்டடைவீர்கள்

(அ.மீனாட்சி, தமிழ் உதவிப்பேராசிரியர்,
நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி)

**முன்னுரை :**

தேடுதல் என்பது ஒரு பரந்த நோக்குடையதாகும். அது உலகளாவிய ஒன்றாகும். கண்டறிதலும் அத்தன்மைத்தே தேடுதலின் இறுதி கண்டடைதல் ஆகும். தேடுதல் என்பது இல்லாத துறையே இல்லை எனலாம். எனவே தேடுதலையும் அதன் எல்லையான கண்டறி தலையும் பற்றி சிறிது விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும்.

**சமயம் :**

இறையைத் தேடிக் காணுதலே அடியார்களின் இயல்பு. தேடித்தேடி உன்னைக் காணா மனமும் வாடுதே முருகா என்ற பாடல் இறையைத் தேடிக் காணும் தன்மையைக் கூறுகிறது. இறைவன் உருவமாய் அருவமாய் உள்ளவன்; அவனைப் பக்தியினாலேயே காண

இயலும் என்பதை ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்று மில்லார்க்கு ஆயிரம் திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டோமோ என்றனர் நாயன்மார்கள்.

**அன்பு :**

அன்பு என்பதைப் பிறரிடம் காட்டுவதன் மூலம் தான் நாம் அந்த அன்பைப் பெற முடியும். அன்புடையவர்களைத் தேடித்தேடி அன்பைப் பொழிவதன் மூலமே நாம் அன்பைக் கண்டறிய முடியும்.

**இயற்கை :**

பறவைகளும், விலங்குகளும் தமக்கு வேண்டிய உணவைத் தேடித்தேடி அலைந்தே கண்டறிகின்றன. அதன் மூலம் உயிர்வாழ்கின்றன. வண்டுகள் மலர்களைத் தேடித்தேடி அலைந்து கண்டறிந்து சேர்ப்பதன் மூலமே மதுரமான தேன் நமக்குக் கிடைக்கின்றது.

**அறிவு :**

அறிவுடையவர்கள் புத்தகங்களைத் தேடித் தேடி ஆராய்ந்து கற்பதன் மூலமே தனது ஆராய்ச்சியின் முடிவினைக் கண்டறிய முடிகிறது. இதனை மாணவனது இலக்கணத்தைக் கூறுங்கால் அங்கங்கே கலைகள் தேறும் அறிவன் என்றார் ஆன்றோர்.

**வீரம் :**

விடுதலையை விரும்புபவன் அதனை அடையும் வழியைத் தேடித்தேடி ஆராய்ந்து எதிரியை அழிப்பதற்கான தன்மையை உற்றுநோக்கிச் செயல்பட்டால் அவனால் வெற்றிக்கனியான விடுதலையைக் கண்டறிய முடியும். இதனையே வள்ளுவர்.

தன்வலியும் மாற்றான்வலியும் பிறன் வலியும்
திறம்தெரிந்து தேறப் படும் என்றார்.

**தேடும் தன்மை :**

ஒரு மனிதன் ஆயிரம் முறை தோல்வி அடைந்தாலும் மறுபடியும் அடையவேண்டிய இலட்சியத்தை மீண்டும் ஒரு முறை விடாப்பிடியாய்ப் பற்றிக் கொள்ள வேண்டும் என்பார் சுவாமி விவேகானந்தர் இதனையே.

தட்டுங்கள் திறக்கப்படும் கேளுங்கள் கொடுக்கப்படும் என்றார் இயேசு பெருமான். முயன்றால் முடியாதது இல்லை!

முயற்சி திருவினையாக்கும்! முயற்சி உடையார் இகழ்ச்சி அடையார் என்ற பழமொழிகளும் தேடுங்கள் கண்டடைவீர்கள் என்பதனையே பரதிபலிக்கின்றன. என்று கூறவும் வேண்டுமோ.

தேடுதல் என்பது நம் உடலோடு உயிரோடு பின்னிப்பிணைந்த ஒன்றாகும். பிறந்த குழந்தை தாயின் அன்பை அரவணைப்பைத் தேடுகிறது. வளரும் காலத்தில் நண்பர்கள், உறவினர்கள், உற்றார்கள் அளிக்கும் அன்பையும் ஆதரவையும் தேடுவார்கள். வளர்ந்த பின் வாழ்வி;ன தேவையைப் பூர்த்தி செய்யும் பொருளைத் தேடுவார்கள். ஆனால் பிறவாப்பயனை அளிக்கும் முக்தியைத் தரும் இறையைத் தேடுபவர்கள். சிலரே அத்தகைய சிலருள் ஆதிசங்கரர், இராமகிருஷ்ண பரமஹம்சர், சாரதா தேவி, விவேகானந்தர் போன்றோர் குறிப்பிடத்தக்கவர்கள். அவர்களைப் போல் நிலையற்ற இவ்வுலகில் நிலைத்த பெயரைப் பெற வேண்டுமானால் செயற்கரிய செயல்களைத் தேடித்தேடிச் செய்து இணையற்ற புகழையும் இறையடியையும் தேடித்தேடிக் காணுதலே சாலச்சிறந்தது ஆகும்.

மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்
தம் புகழ் நிறீஇத் தாம் மாய்ந்தனரே

என்ற புறநானூற்று அடியை உட்கொண்டு வாழ்தல் ஏற்புடைத்தாகும்.

**முடிவுரை!**

தேடுதலின் இறுதி காண்டலாகும். எனவே ஒவ்வொரு மனிதனும் தன் வாழ்நாளில் இவ்வுலக வாழ்விற்கு உரித்தானவற்றைத் தேடிக் காண்டலுடன் மறுமைக்குரிய செயல்களையும் தேடிக்காணுதலே சாலச்சிறந்தது. ஆகும்.

---

## உலக அமைதிக்கு வள்ளலார் வகுத்த நெறிகள்

டி.ஆர்.குருமூர்த்தி, பேராசிரியர் & துறைத்தலைவர்
வணிகவியல் துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி

எல்லார்க்கும் எல்லாம் என்கிற தத்துவமும் நானல்ல நீ என்கிற கொள்கையும் மானுட அமைதிக்கான அடிப்படை அம்சங்களாகும். அன்புநெறி, அற நெறி, அருள் நெறி ஆகிய மும்மணிகள் மனிதகுலத்தை அமைதி வழியில் நெறிப்படுத்த உதவுகின்ற உத்திகளாகும். இறையருளும் மனிதநேயமும் மனிதகுல அமைதிக்குப் பெரிதும்

தேவைப்படுகின்றன. அன்பும் அறனும் மனிதநேயத்தின் வெளிப்பாடாகும். அருள்நெறி இறையருளின் வெளிப்பாடாகும். எல்லாரும் சமம், ஒன்றே குலம் ஒருவனே தேவன் ஆகிய கோட்பாடுகள் மனித குல அமைதிக்கு உரமாகத் திகழ்கின்றன. அனைவரும் சமம் என்கிற உண்மைநிலை அடைய உயர்வான வழியினைத் தேட வேண்டும் என இராமலிங்க அடிகளார் வலியுறுத்துகின்றார். இதனையே சமரசசுத்த சன்மார்க்கம் என அழைக்கின்றார். ஜீவகாருண்யம் என்பது உலக அமைதியின் அடிப்படைநெறி எனவும் வள்ளலார் தெளிவுபடுத்துகின்றார். இறையருளும் மானுட ஒருமைப்பாடும் அமைதியின் இரு கண்களாகும். மானுட எண்ணம் அனைவரையும் சமமாகப் பார்க்கும் அளவிற்கு உயரவேண்டுமெனில், இறையருள் கைக்கூட வேண்டும். இறைவன் மேலானவன், தூயவன், மண்ணையும் மக்களையும் காக்கும் சக்தி கொண்டவன், அனைவரையும் சமமாகப் பார்ப்பவன், துயர் தீர்ப்பவன், அபயம் அளிப்பவன், நல்வழி காட்டுபவன் என்கிற நம்பிக்கை மக்களிடம் உண்டு. இத்தகு நம்பிக்கையின் விளைவாக இறையருள் சாத்தியப்படுகின்ற போது மனித உள்ளத்திலும் உயர்வான குணங்கள் தங்கிவிடுகின்றன. மனிதகுல ஒருமைப்பாடு சாத்தியமாகின்றது. மனித குல அமைதி உறுதிசெய்யப்படுகின்றது. நன்றிது தேர்ந்திடல் வேண்டும். இந்தஞானம் வந்தால் பின் நமக்கெது வேண்டும் என்கிற பாரதியாரின் வரிகளின் படி, மனிதகுல அமைதி என்கிற நல்ல அம்சத்தைக் கடைப்பிடிக்கும் ஞானம் கிட்டிவிட்டால், உலக வாழ்வில் வேறென்ன வேண்டும். இப்பூமியிலே மனிதவாழ்வு நெடுங்காலம் இல்லை. கல்வி கரையில, கற்பவர் நாள்சில என்பது போல, வாழ்கின்ற ஆண்டுகள் குறைவாக உள்ளன. இத்தகு குறைவான வாழ்நாளில் மனிதகுலத்தை உய்விக்க உயர்வான வழிகளைக் காணுதல் வேண்டும். கீழ்க்காணும் நாலடியார் பாடல் இதனை நினைவூட்டுகிறது.

புல்நுனிமேல் நீர்போல நிலையாமை என்றெண்ணி
இன்னினியே செய்க அறவினை – இன்னினியே
நின்றான் இருந்தான் கிடந்தான்தன் கேள்அலறச்
சென்றான் எனப்படுத லால்.

புல்நுனிமேல் இருக்கும் அதிகாலைப் பனித்துளி சூரிய

ஒளிபட்டவுடன் காணாமற் போகும். பனித்துளியின் வாழ்வு நிலையற்றது. அதுபோலவே மனிதவாழ்வில் நிலையாமை உண்டு. இதனால் நற்செயல்களை இப்பொழுதே செய்க என இப்பாடல் அறிவுறுத்துகின்றது. இல்லையெனில் பிறந்தான் நின்றான், இருந்தான், தனது சொந்தங்களை அழவைத்துவிட்டுச் சென்றுவிட்டான் என்கிற நிலையில் வாழ்வு அமைந்துவிடும். இக்கருத்தினை வலியுறுத்தி, புல்நுனிப்பனி வெங்கதிர் கண்டாற்போலும் வாழ்க்கை பொருள்இலை நாளும், எனக்கு இனிஇன்றைக்கு நாளை என்றிருந்து இடர்உற்றனன் எந்தாய், முன்னமே உன்சேவடி சேரா மூர்க்காகிக் கழிந்தன காலம். இன்னம் என்றனக்கு உய்வகை அருளாய் இடைமருதுறை எந்தைபிரானே எனச் சுந்தரமூர்த்தி நாயனார் பாடியுள்ளார். நம்மிடையே உள்ள குறைவான வாழ்நாளில் மனிதகுலம் உய்விக்கத் தேவையான உயர்ந்த நெறியாக இருக்கும் அமைதி என்னும் நெறியினை உருவாக்கும் உயர்ந்த வழியினை அமைத்துவிட வேண்டும் தனிமனித அமைதியே உலக அமைதி.

வள்ளலார் உலக அமைதியை இருவழிகளில் அடைவதற்கு வழிவகை செய்துள்ளார். மனிதநேய ஒருமைப்பாடு என்பது ஒருவழி. மற்றொன்று இறையருள் வழியாகும். உலக அமைதி நிலைப்படுத்த வள்ளலார் தந்துள்ள மனிதநேய ஒருமைப்பாடு குறித்த அற்புத விதிகள் கீழே தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன. சுத்த சன்மார்க்க வேண்டுகோள் என்கிற தலைப்பில் இவ்விதிகள் கூறப்பட்டுள்ளன.

ஆருயிர்கட்கெல்லாம் நான் அன்புசெயல் வேண்டும்
பொய்யாத வாய்மைகளே புகன்றிடுதல் வேண்டும்
புகன்றபடி புகன்றபடி புரிந்திடுதல் வேண்டும்
ஒத்தாரும் உயர்ந்தாரும் தாழ்ந்தாரும் எவரும்
ஒருமையுளர் ஆகி உலகியல் நடத்தல் வேண்டும்.
புரைசேரும் கொலைவெறியும் புலைநெறியும் சிறிதும்
பொருந்தாமல் எவ்வுயிரும் புரிந்துவத்தல் வேண்டும்
துடிசேர் எவ்வுலகமும் எத்தேரும் எவ்வுயிரும்
சுத்தசிவ சன்மார்க்கம் பெற்றிடுதல் வேண்டும்

எனை அடுத்தார் தமக்கெல்லாம் இன்புதரல் வேண்டும்
இச்சாதி சமயம் விகற்பங்களெலாம் தவிர்த்தே
இவ்வுலகில் சன்மார்க்கப் பொதுவடைதல் வேண்டும்
அணுத்துணையும் சினங்காமம் அடையாமை வேண்டும்
மருளாய உலகமெலாம் மருள் நீங்கிஞான
மன்றிடத்தே வள்ளல் உனை வாழ்த்தியிடல் வேண்டும்
இருளாமை உறல் வேண்டும் எனை அடுத்தார் சுகம்வாய்த்
திடல் வேண்டும் எவ்வுயிர்க்கும் இன்படைதல் வேண்டும்

அன்பு, வாய்மை, சொல்படி நடத்தல், ஒற்றுமை, கொலைவெறி, புலைநெறி தவிர்த்தல், எச்சார்பும் இல்லாதிருத்தல், எனை அடுத்தவரை மகிழ்வித்தல், சாதி சமயம் தவிர்த்துப் பொதுவுடைமை கடைப்பிடித்தல், சினம் காமம் கொள்ளாதிருத்தல், மனத்திருள் களைதல், எனை அடுத்தவர் சுகமாய் வாழ்தலை உறுதிசெய்தல், அனைவரும் சமம் என்கிற ஒருமைக்குள் அனைவரும் உலகில் வாழ்ந்திடுதல் ஆகிய அம்சங்களை உலக அமைதிக்கு வள்ளலார் பறைசாற்றுகின்ற கொள்கைகளாக நாம் எடுத்துக் கொள்ளலாம்.

உலகத்து அனைத்து உயிர்களிடத்தும் அன்பு செலுத்தவேண்டும். அன்பு என்பது பிறருக்காக வாழ்தல் எனப் பொருள்படுவதுமுண்டு. தாய் தன் குழந்தைகளுக்காக வாழ்வது போல. ஒவ்வொருவரும் மற்றவர்க்காக வாழ்ந்திட முயல வேண்டும். அன்பு தழைத்தோங்கும். வேறுபாடுகள் அகலும் அகப்பிணிகளும் புறப்பிணிகளும் மறைந்து போகும். அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு என்பது புலனாகும். அன்பு நேயத்தையும் மனிதகுல அமைதியையும் உருவாக்கும். பொய்யாத வாய்மைகளைப் புகன்றிடுதல் வேண்டும். வாய்மை என்பது பொய்தவிர்த்தல் எனப்படும். பொய்யாத வாய்மைகள் என வள்ளலார் குறிப்பிடுகிறார். என் சொல்லும் செயலும் மிக உண்மையான சத்தியம் எனப்பொருள் கொள்ளலாம். பொய் தவிர்த்தல். வாய்மை கடைப்பிடித்தல் மனிதகுல அமைதிக்கு வழிகோலும். சொன்னபடி நடந்திடுதல் வேண்டும். வாக்குறுதிகளை நிறைவேற்றிடல் வேண்டும். சொன்னபடி நடக்கவில்லையெனில் நம்பிக்கை போய்விடும். அமைதி குலையும்.

சமூக – பொருளாதார அடிப்படையில் வேறுபாடுகள் உருவாகக்கூடாது. பொருளாதார அடிப்படையில் நமக்கு இணையாக இருப்பவரையும், உயர்வாக இருப்பவரையும், தாழ்வாக இருப்பவரையும், எவரையும் வேறுபடுத்திப் பார்க்கக் கூடாது. அனைவரும் சமமே எவ்வுயிரும் சமமே என்கிற கண்ணோட்டம் வேண்டும். இதனைத்தான் இராமலிங்க அடிகளார் சமரசசுத்த சன்மார்க்கநெறி என்கிறார். இந்நெறி மனிதகுல அமைதிக்கு உதவிடும். ஜீவகாருணியத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். அனைத்து உயிர்களிடத்தும் கருணை காட்ட வேண்டும். கருணையினால் மனிதகுலம் ஒன்றுபடும். கடையவன் எனைக் கருணையினால் கலந்து ஆண்டுகொண்ட விடையவனே எனக்கருணையின் சிறப்பினை மாணிக்கவாசகர் குறிப்பிடுகிறார். ஜீவகாருண்யம் தீமைசெய்யும் கொலைவெறியைத் தடுக்கும். புலால்நெறியைத் தவிர்க்க உதவும். ஜீவகாருண்யம் மனிதகுல அமைதிக்கு உரமாகும். சாதி, சமயம், மத பேதங்களிலிருந்து விடுபடுதல் வேண்டும். சினம், காமம் போன்ற தீயநெறிகள் அணுஅளவும் மனதில் இருக்கக்கூடாது. உலக மக்களைத் துன்புறுத்தும் தீயஇருள் அனைத்தும் சமரசசுத்த சன்மார்க்க நெறியால் களையப்பட வேண்டும். நம்மை அடுத்தவர்க்கு அனைத்துச் சுகங்களும் கிடைத்திட நாம் உதவிடுதல் வேண்டும். இதனால் மனிதகுல அமைதி உயர்ந்திடுதல் சாத்தியமாகும். எல்லாரும் இன்புற்று இருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே எனத் தாயுமானவர் தமது பராபரக்கண்ணியிலே பாடியிருப்பது இங்கு நினைவுகூறத்தக்கதாகும்.

மனிதகுல ஒருமைப்பாடு குறித்து மேலே சொன்ன விதிகளை எல்லாம் அகக்கோட்பாடாகக் கொள்ளலாம். மனிதகுல அமைதியை நிலைநாட்டும் அகக்கோட்பாடுகளாகக் கருதலாம். வாழ்வதற்குத் தேவையான வசதிகள் வேண்டும். வசதிகள் சமமாக இருப்பின். மனிதகுல அமைதிக்கு வித்தாக அமையும். மனித வாழ்விற்குத் தேவையான வசதிகளை, வாய்ப்புகளை. இயற்கை வளங்களை அனைவர்க்கும் சமமாகவே இறைவன் படைத்துள்ளார். சமமற்ற நிலையை உருவாக்குவது மனிதனது தவறான அகச்சிந்தனையாகும். மனிதனைத் திருத்தி வாழ்விப்பது இறையருள். மனிதனது தவறான

அகச்சிந்தனைகள் நீங்க இறையருள் துணை செய்யும். இதனை விளக்குவதற்குக் கீழ்க்காணும் திருவருட்பா பாடலை மேற்கோளாகக் காட்டலாம்.

நீர்உண்டு பொழிகின்ற கார் உண்டு விளைகின்ற
நிலன் உண்டு பலனும் உண்டு
நிதிஉண்டு துதிஉண்டு மதிஉண்டு கதிகொண்ட
நெறிஉண்டு நிலையும் உண்டு
ஊர்உண்டு பேர்உண்டு மணிஉண்டு பணிஉண்டு
உடைஉண்டு கொடையும் உண்டு
உண்டுண்டு மகிழவே உணவுண்டு சாந்தம் உறும்
உளம்உண்டு வளமும் உண்டு
தேர்உண்டு கரிஉண்டு பரிஉண்டு மற்றுள்ள
செல்வங்கள் யாவும் உண்டு
தேன்உண்டு வண்டுறு கடம்பணியும் நின்பதந்
தியானமுண் டாயில் அரசே

வண்டுகள் தேன் அருந்தத் தங்கும் கடம்ப மலர்மாலையினை அணியும் இறைவன் திருவடியைத் தியானித்தால், மனித வாழ்விற்குரிய அனைத்து வளங்களும் கிட்டும் என்கிற நம்பிக்கையை இப்பாடல் உணர்த்துகின்றது. இராமலிங்க அடிகளார் இறையருளில் தோய்ந்து, தெய்வீக வாழ்வு பெற்றவர். மனிதர்கள் தமது மாயமனத் திரைகளை நீக்கினால், உண்மையான சோதியைப் பார்க்கலாம்; வழிபடலாம் என உணர்த்தியவர். அவரது பாடல் வரிகளில் உண்மை இருப்பதை நாம் உணரலாம். நம்பிக்கை வைக்கலாம். இப்பாடல் மனித வாழ்வின் புறத்தேவைகளையும் அகத்தேவைகளையும் நமக்குத் தெளிவுபடுத்துகின்றது. சாந்துமுறும் உள்ளத்தை வள்ளலார் வலியுறுத்துகின்றார். அமைதியுறும் உள்ளம் இறைவன் திருவடியினைத் தியானித்தால் சாத்தியம் என வள்ளலார் தெளிவுபடுத்துகின்றார். அமைதியுறும் உள்ளத்தை அமைத்துக் கொள்ளும் பக்குவத்தை நாம் பெற்றிடல் வேண்டும்.

அன்புடைய நின்அடியர் பொன்அடியை உன்னும் அவர்
அடிமலர் முடிக்கணிந்தோர்க்

கவலமுறுமோ காமம் வெகுளி உறுமோ
மனத்தற்பமும் விகற்பம் உறுமோ

என இராமலிங்க அடிகளார் இறையருளின் மேன்மையினை விளக்குகின்றார். இறையருள் கவலைகள் போக்கும். காமம் வெகுளி போன்ற தீய குணங்களை நீக்கும். மனம் சார்ந்த பிரச்சினைகளையும் வேறுபாடுகளையும் களையும். கவலை, மனக்கஷ்டம், வேறுபாடுகள் மனிதகுல அமைதியைக் கெடுக்கும். இறையருள் இக்குற்றங்களை நீக்குவதால் மனிதகுல அமைதி ஓங்கும். மனிதகுலம் வாழ்வுபெறும், தழைத்தோங்கும்.

படித்தவர்கள், படிக்காதவர்கள், கண்டவர்கள், காணாதவர்கள், வல்லவர்கள், வல்லவரல்லாதோர், மதிப்பவர், மதியாதார், நல்லார், பொல்லாதவர், தேவர்கள், அசுரர்கள் அனைவர்க்கும் இறைவன் சமமானவர் என்கிற சமதர்மத் தத்துவத்தை உணர்ந்தவர் இராமலிங்க அடிகளார். அந்த உணர்வினைக் கீழ்க்காணும் திருவருட்பாவில் தெளிவுபடுத்துகின்றார். இச்சமதர்ம உணர்வு மனிதகுல அமைதிக்கு உயிராகும்.

கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பே
காணார்க்கும் கண்டவர்க்கும் கண்ணளிக்கும் கண்ணே
வல்லார்க்கும் மாட்டார்க்கும் வரம் அளிக்கும் வரமே
மதியார்க்கும் மதிப்பவர்க்கும் மதிகொடுக்கும் மதியே
நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவே
நரர்களுக்கும் சுரர்களுக்கும் நலங்கொடுக்கும் நலமே
எல்லார்க்கும் பொதுவில் நடம்இடுகின்ற சிவமே
என்அரசே யான்புகலும் இசையும் அணிந்தருளே.

உலக அமைதி இன்றைக்கு அடிப்படைத் தேவையாக உள்ளது. மனித வாழ்விற்குரிய புறத்தேவைகளை உருவாக்கவும் மேம்படுத்தவும் எண்ணற்ற தொழில்நுட்பங்களும் உலகளாவிய வர்த்தகக் கொள்கைகளும், உதவிடலாம். நான், எனது வளம், எனது மக்கள், என மனிதமனம் குறுகிவிடக்கூடாது.

ஒவ்வொரு மனிதனும் தனது மனதில் முழு உலகத்திற்கும் இடம்

அளிக்க முடியும். நாடுகளுக்கிடையே பதற்றங்கள் குறைய வேண்டும். பதற்றங்களுக்கும் பல்வேறு காரணங்கள் இருக்கலாம். பதற்றங்களால் அமைதி கெடுகின்றது. ஒரு நாட்டில் வளர்ச்சி என்பது பொருளாதார தொழில்நுட்ப வளர்ச்சியினால் மட்டும் ஏற்பட்டுவிடாது. ஏனெனில் இவையெல்லாம் நிரந்தரம் அற்றவை. எப்பொழுது வேண்டுமானாலும் மாறலாம். ஆனால் தாயன்புமாறாது; சமரச சுத்த சன்மார்க்க நெறி மாறாது. மனித ஒருமைப்பாட்டுக் கொள்கைகள் மாறாது. இறையருள் உள்உணர்வு சம்பந்தப்பட்டதாகும். உள்உணர்வு சமதர்மம் பேசினால் சமதர்மம் கடைப்பிடித்தால் மனிதகுல அமைதி தழைத்தோங்கும். இதனைத்தான் இராமலிங்க அடிகளார் இரு நூறு ஆண்டுகளுக்கு முன்னரே சமரச சுத்த சன்மார்க்க நெறியிலும், ஜீவகாருண்ய ஒழுக்கத்திலும் தெளிவுபடுத்தியுள்ளார். அருட்பெருஞ்சோதி தனிப்பெருங்கருணை எனக் கல்வெட்டுச் செய்துள்ளார். வள்ளலாரின் சமரச சுத்த சன்மார்க்க நெறி மனிதகுல அமைதிக்கான பாதையாகும். பயணம் செய்வோம். பயன் பெறுவோம்.

## கைவல்ய நவநீதம் - தத்துவ விளக்கப் படலம்

### (கவி எண்.39, 40ல் அபவாதம் காண், அபவாத உபயமாவிற்காண் ஆராய்ச்சிஉரை - பா. வெங்கடராமன்)

39. அரவன்று கயிறென் றாற்போ லாளன்று தறிபென் றுற்போது
குரவன்சொல் லுபதே சத்தாற் கூறுநூ லொளியைக் கொள்
புரமன்று புவனமன்று பூதங்களன்று ஞானத்
திரமென்னும் பிரம மென்று தெளிவதே அபவா தங்காண்.

40. படமுநூ லும்போற் செய்த பணியும்பொன் னும்போற் பார்க்
கடமுமண் ணும்போ லென்றாங் காரிய காரணங்கள்
உடன் முதற் சுபாவ மீறா வொன்றிலொன் றுதித்த வாறே
அடைவினி லொடுக்கிக் காண்பது) அபவாத உபாய மாமே.

இப்பாடல்களில் அபவாதங்கண் அபவாத உபாயமாமே என்று தாண்டவராய சுவாமிகள் குறிப்பிடுகிற அபவாதம் என்றால் என்ன? இதற்குப் பொருள் பார்ப்பதற்கு முன் ஆரோபம் என்றால் என்ன? என்று அறியேன். ஏனென்றால் இக் கைவல்ய நவநீதத்திலேயே முன்பு ஒரு பாடலில்

ஆரோபந்தாற் பந்தமாம், அபவாதந்தாம் முத்தியாம், இவ்விரண்டின் முந்தி ஆரோபங் கேளாய் என்று கூறப்பட்டுள்ளது.

ஆரோபம் என்றால் ஆதிசங்கரர் பாஷியபடி, மயக்கத்தால் ஒன்றின் மேல் வேறொன்றை ஏற்றி வைத்துப் பார்ப்பது.

ஞான வாசிட்டத்தில் ஒரு பாடலுக்கு விளக்கம் அளிக்கும் போது பிறசை அருணாசல சுவாமிகள், அத்தியா பமாவது யதார்த்தமான சச்சிதானந்தப் பிரத்தியட்சத்தை இல்லாத நாமரூப வடிவமான சகமாக விபரீத பாவனையாற் காண்குதல் என்றும்.

அபவாதமாவது - விபரீத பாவனையாற் பார்க்கின்ற இல்லாத நாமரூப வடிவமாகிய சகத்தை யதார்த்தமான சச்சிதானந்த வடிவமாகத் தெளிவினாற் காண்குதல் என்றும் கூறுகிறது.

சுருக்கமாக, ஆரோபிதம் பிரவிருத்தி வழி என்றும் அபவாதம் நிவர்த்தி வழி என்றும் கூறலாம்.

இனி கைவல்ய நவநீகூத்தில் கூறியுள்ளதைப் பார்ப் போம்.

இங்கே குறிப்பிட்டுள்ள முதல் பாடலின் விளக்கம்

அந்திப் பொழுதில் பாம்பு என்று பார்த்துப் பயந்து ஒருவனுக்கு அவ்வழியே செல்லும் வழிப்போக்கன் (அ) ஆப்தன் தன் கையில் உள்ள விளக்கின் ஒளியைக் கொண்டு ஆய்ந்து பாம்பு அல்ல இருப்பது கயிறுதான் என்று கூறுவது போல, குருவானவர். சாஸ்திரங்களின் துணை கொண்டு இது புரமன்று - இது உடல் அல்ல, சித்சொருபமாக உள்ள பிரமம் என்றும் பூதங்களன்று - பஞ்சபூதங்கள் அல்ல - சித்சொருபமாக உள்ள பிரமம் என்று தெளிவு பெறுவதே அபவாதம்.

ஆதி சங்கரரும் விவேக ஷட்கத்தில்

பழுதைதன் னிடத்திற் பாம்புதோன் றுதல்போற்
 பிரப்பிர மத்திடை யதனிற்
கழிதரு மஞ்ஞா னத்தினாற் சீவ
 னுதித்திடக் கண்டவ னொருவன்
பழுதையென் றதனாற் சற்ப மோ கமும்போய்ப்
 பழுதையாய்க் கண்டது போல
வழுவிறே சிகனார் சீவனீ யன்றென்
 றடைந்திட வாகினேன் சிவோகம்

என்று கூறுகிறார்.

பாம்பு அல்ல என்றதும் பயம் நீங்கிக் கயிறாகக் கண்டது போல, தேசிகனார் சீவன் நீ அல்ல என்றவுடன், இது உலகம், அல்ல என்றவுடன், மோகம் நீங்கி யதார்த்தமான சச்சிதானந்த பிரமமாக எல்லோராலும் காண முடிகிறதா? என்றால், இல்லை என்பது தான் பதிலாக அமைகிறது. அதாவது இந்த உடல், உலகம் உலக விவகாரம் அனைத்தும் இருந்து கொண்டேதான் இருக்கிறது. அதுமட்டுமல்ல, சீவன்முத்தர்களுக்கும் இந்த உடல், உலக விவகாரம் அனைத்தும் இருந்து கொண்டுதான் இருக்கும் என்று கைவல்ய நவநீதமும் பின்வருமாறு கூறுகிறது.

தீரராய்ப் பிரம வித்தாய்த் தெளிந்தவர் தெளியும் முன்னம்
வாரமாய் இருந்த தங்கள் வருணம் ஆச்சிரமம் சொன்ன
பாரகாரியம் ஆனாலும் பலர்க்கு உபகாரம் ஆக
நேரதாச் செய்வர் தீர்ந்த நிலைவிடார் சீவன் முத்தர்

இது தொடர்பாக ஒரு உதாரணம் பின்வருமாறு ஒரு காட்டில் ஒரு மாத்தடியில் ஒருவர் தவம் செய்து கொண்டு இருந்தார். ஒரு நாள் ஒரு கொக்கு அந்த மரத்தின் மீது அந்தத் தவயோகியின் மீது எச்சம் இட்டுவிட்டது. உடனே தவத்திலிருந்து கண் விழித்து அவர் மேலே நோக்கி அந்தக் கொக்கைப் பார்ப்பார். அந்தக் கொக்கானது தீப்பற்றி எரிந்து விடும். இதை அறிந்த அந்த யோகி, தனக்குத் தவ உடமை கைக் கூடிவிட்டது என்று அங்கிருந்து புறப்பட்டு விடுவார். வழியில் ஒரு வீட்டுமுன் நின்று பிச்சை கேட்பார். அந்த வீட்டுப் பெண்மணி இதோ வருகிறேன் என்று சொல்லிவிட்டுத் தன் கணவருக்குப் பணிவிடைகள் எல்லாம் செய்துவிட்டு நேரங்கழித்து வந்து அன்னம் இட வருவார் அந்தத் தவயோகி காலம் கடந்து வந்ததனால் கோபம் கொண்டு முறைத்துப் பார்ப்பார். முன்போல் எதுவும் நடக்காது. அதற்கு அந்தப் பெண்மணி, என்னை என்ன கொக்கென நினைத்தாயா? கொங்கணவா எனக் கூறுவார். அதைக் கேட்டதும் அந்தத் தவயோகிக்குக் காட்டில் நடந்த சம்பவம் இந்த அம்மையாருக்கு எப்படித் தெரியும் என யோசிக்கும் போதே, அந்த அம்மையார் பக்கத்து ஊரில் உள்ள இறைச்சிக் கடைக் காரரை இது கேட்டுத் தெரிந்துகொள் என்று கூறுவார். அந்த ஊருக்குச் சென்று அந்தக் கடைக்காரர் முன்போய்

நிற்பார். இவரைப் பார்த்ததும், அந்த அம்மையார் அனுப்பி வைத்தார்களா? என்று கேட்டதும் இவருக்கு மேலும் ஆச்சரியம். ஏனெனில் அந்தக் காலத்தில் தொலைபேசி வசதியெல்லாம் கிடையாது. இவ்விஷயம் எல்லாம் எப்படி இவருக்குத் தெரிந்தது என்று ஆச்சரியப்படுவார். அந்த இறைச்சிக் காரர் தன் வேலைகளை முடித்துக் கொண்டு அவரை வீட்டுக்கு அழைத்துச் செல்வார். அங்கே தன் பெற்றோர்களுக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளைச் செய்து விட்டுப் பிறகு அவரிடம் கூறுவார், பிரமஞானம் அடைந்திருப்பதாகவும். தன் பெற்றோர்களுக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளையும் குடும்பத் தொழிலையும் யோக நிலையில் செய்து வருவதாகவும் தெரிவிப்பார். ஆகவே பிரமஞானம் அடைந்தாலும் இந்த உலகம் தோற்றிக் கொண்டே தான் இருக்கும்.

குருவானவர் நீ இந்த உடல் அல்ல, சித்சொருபமான பிரமம் என்று சொன்ன உடன் தன்னைச் சித்சொருபமான பிரமம் என்று ஏன் அறியமுடியவில்லை? ஏனெனில், இங்கு சொல்லப்பட்ட வாக்கியம் சுருதிப் பொருளாகும். எந்த ஒரு அறிவு சார்ந்த விஷயமும் சுருதி, யுத்தி அனுபவம் என்றும் உபதேச முறைப்படி விசாரித்தறியப்பட வேண்டும். அந்த வகையில் அபவாதத்திற்கான சுருதிப் பொருளாக சொல்லப்பட்டதேயன்றி மகாவாக்ய உபதேசம் அன்று.

அடுத்த பாடலில்,

உடல் முதல் சுபாவம் ஈறா ஒன்றில் ஒன்று உதித்தவாறே
அடைவினில் ஒடுக்கிக் காண்பது அபவாத உபாயமாமே என்று
அபவாதத்திற்கான யுத்தி பொருளைக் கூறுகிறார்.

அதாவது அவ்வியக்கம் முதல் தூல உடல்வரை உண்டான சிருஷ்டி கிரமத்தை முறையே நேர்தலைகீழாக உடல்முதல் அவ் வியக்தம் ஈறாக ஒடுக்கிக் காண்பது அபவாத உபாயம் என்று சொல்கிறார்.

நாநா சீவவாத கட்டளையில் பத்தி எண்.30,31,32,33ல் தத்துவங்கள் 35 உம் பிரமத்தில் ஒடுங்குகின்ற வழியைச் சொல்லுகின்றன.

சகல சீவர்களிடத்தினும் இருக்கின்ற தூல சரீரங்களனைத்தும் தமக்கு ஆதாரமான தூலபூதங்களில் மடிந்து பூதமாத்திரமாக

ஒடுங்கும். இந்தத் தூல பூதங்களும் பஞ்சிகரணம் விட்டுத் தன் மாத்திரைகளான தாமதகுண பூதங்களாக மிஞ்சும். சூட்சும சரீர தத்துவங்கள் (20)ம் கட்டுவிட்டுப் பூதங்களின் சாத்துவீக குணமும் இராசத குணமுமாக ஒடுங்கும்; சகல பிராணிகளிடத்தினுமிருக்கின்ற அகங்காரமும் ஆக்கிராணமும் உதாரவாயுவும், உபத்தமும், பிரிதிவியில் ஒடுங்கும்; சித்தமும் சிங்வையும், சமானனும் பாயுருவும் அப்புவில் ஒடுங்கும், புத்தியும் கட்சுவும் அபானனும் பாதமும் அக்கினியில் ஒடுங்கும்; மனதும் துவக்கும் பிராணனும் பாணியும் வாயுவில் ஒடுங்கும், உள்ளமும் சுரோத்திரமும் வியானனும் வாக்கும் ஆகாயத்தில் ஒடுங்கும். அப்போது பழையபடியே முக்குண பூதங்கள் ஆகும். இந்த சூட்சும பூதங்களும் பிருதிவி அப்புவும் கரைந்து ஒடுங்கும், அப்புவும் அக்னியிற் சுவறி ஒடுங்கும், அக்னியும் விளக்குப் போல வாயுவில் அணைந்து ஒடுங்கும், வாயு ஆகாயத்தில் ஒய்ந்து ஒடுங்கும், ஆவரண சக்தியும் விட்சேட சக்தியும் மூலப்பிரகிருதியின் தமோகுண மாத்திரமாய், ஆலமரம் ஆலவிதையில் ஒடுங்கினாற் போலப் பின்னுமொரு சிருட்டிக்கு வித்தாக அவித்தையும் அதிநுண்மையான மூலப் பிரகிருதியென்னும் விந்து தத்துவமாக ஒடுங்கும். அவ் விந்து தத்துவமும் பாம்பு பழுதை மாத்திரமாக ஒடுங்கியது போலத் தனக்கதிட்டாநமான பிரம சைதந்நிய மாத்திரமாக ஒடுங்கும்.

இக்கட்டளையில் கூறப்பட்டது, பிரளயத்தின் போது நடக்கின்ற ஒழுக்கமாகும்; ஒடுங்குதல் என்றால் வயம் ஆவது; அதாவது பாலில் சர்க்கரை கரைவது போல; அது போல இந்தத் தூல உடலைத் தூல பஞ்ச பூதத்தில் ஒடுக்க வேண்டும். இவ்வாறு ஒடுக்குதல் சாத்தியமில்லை. ஒருவேளை தூல உடலைத் தூல பஞ்சபூதத்தில் ஒடுக்கினால் ஒடுக்குவது யார்? எவ்வாறு ஒடுக்க முடியும், ஏனெனில் அங்கே நான் என்ற இருப்பு இல்லையே! அதனால் தான் கைவல்லய நவநீதத்திலும், சுழுத்தியில் பிரளயத்தில் தோற்ற மாஞ்சகங்கள் மாண்டும் அழுத்திய பவம் போய் முத்தியடைந்தவர் ஒருவர் உண்டோ என்று குருவானவர் கேள்வி கேட்கிறார்.

அப்படியென்றால் எவ்வாறு ஒடுக்குவது அதற்கான உபாயம் என்ன? என்றால், இங்கே மேலே குறிப்பிடப்பட்டுள்ள 2வது பாடலின் முதல் இரண்டு அடிகளில் அதற்கான உபாயம் கூறப்பட்டுள்ளது.

அதாவது படமும் நூலும் போல் என்னுமிடத்தில் காரியமான படம் - வஸ்து (அ) துணி - காரணமான நூலையன்றி வேறில்லை. ஆதாரமான, காரணமான நூல் இல்லையெனில் ஆடையோ வஸ்திரமோ இல்லை. ஆகவே இருப்பது காரணமான நூல் தான் என்றும், நாமரூப காரியமான ஆடை பொய்யென்றும் இல்லையென்றும் காரியத்தைக் காரணத்தில் ஒடுக்கிப்பார்ப்பது அபவாத உபாயமாம். அதே போலக் காரியமான தங்க ஆபரணம், காரணமான தங்கத்தையன்றி வேறில்லை, இருப்பது காரணமான தங்கம் தான். அதே போலக் காரணமான களிமண்ணை அன்றி நாமரூப காரியமான கடம் இல்லை. இருப்பது காரணமான களிமண் தான் என்று காரியத்தைக் காரணத்தில் ஒடுக்கி அறிவது போல, காரியமான இந்தத்தூல உடல் காரணமான தூல பஞ்ச பூதத்தையன்றி வேறில்லை என்று அபவாத உத்தியினால் விசாரித்தறிய வேண்டும். அதாவது தூல உடலில் உள்ள கடினமான பொருட்கள் எலும்பு தசை போன்றவைகள் ப்ருதிவி அம்சம், இரத்தம், சீறுநீர், வியர் போன்றவைகள் அப்புவின் அம்சம், வயிற்றில் உதராக்னி கனன்று கொண்டு இருப்பது அக்னி அம்சம், நரம்பு போன்றவை வாயுவின் அம்சம், ரோமம் போன்றவைகள் ஆகாயத்தின் அம்சம். இப்படித்தூல பஞ்சபூதத்தின் அம்சம்தான் தூல உடலில் உள்ளன. ஆகவே நாமரூப காரியமான தூல உடல் காரணமான தூல பஞ்சபூதம்தான் என்று காரியத்தைக் காரணத்தில் ஒடுக்கிக் காரணம் பஞ்சபூதமாக யுத்தியினால் அறிவது அபவாத உபாயமாம். ஆகவேதான், அண்டத்தில் உள்ளது பிண்டத்தில் உள்ளது என்று சொல்லப்படுகிறது. கைவல்ய நவநீதத்தில் ஒரு பாடலில்,

தூல பஞ்ச பூதமும் சூட்சும அபஞ்சிகிருத பஞ்சபூதத்தின் காரியமாகும். ஆகவே காரியமான தூலபஞ்சபூதமும் பொய் என்றும் இல்லை என்றும் இருப்பது காரணமானஅவஞ்சீகிருத பஞ்ச பூதம்தான் என்றும் காரிய காரணங்களின் அடிப்படையில் ஒடுக்கிப் பார்க்க வேண்டும். இப்படியே அவ்வியக்கம் ஈறாகக் காரிய காரணங்களை விசாரித்துக் காரணத்தை அன்றிக் காரியம் வேறில்லை, இருப்பது காரணம் தான் என யூகித்து அறிய வேண்டும் பிறகு காரியமான 35வது

தத்துவத்து வமான அவ்வியக்கத்தையும் காரணமான பிரமத்தில் ஒடுக்கி இருப்பது காரணமான பிரமம்தான் என்று யுத்தியினால் தெளிவினால் அறிவது அபவாத உபாயம் ஆகும்.

ஆக மேலே குறிப்பிட்ட 2 பாடல்களின் வாயிலாகப் பிரமத்திற்கான அதத்வியா விருத்தி லட்சணம் (கோ. வடிவேல் செட்டியார் உரையின்படி) சொல்லப்பட்டாலும், அபவாதத்த முக்தியாம் என்ற வாக்கியமானது சுருதியுத்தி, அனுபவம் எனும் உபதேச முறைப்படி, இங்கே சுருதியுத்தி மட்டும் விளக்கப்பட்டதாம்; அனுபவம் விளக்கப்படவில்லை.

ஏனெனில் சாதகனுடைய தகுதி, அப்பியாசம் இவற்றின் அடிப்படையில் அனுபவம் சித்தியாவதால், அவரவர்களின் முயற்சியால் அதனை அறிந்து கொள்ள வேண்டியது எனத் தாண்டவராய சுவாமிகள் கூறாது விட்டுவிட்டார் போலும்.

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

## அருள் உடைமை

(உயிர்களிடம் காட்டுகின்ற இரக்கம் உடைமை)

**1. அருட்செல்வம் செல்வத்துள் செல்வம் பொருட்செல்வம்**
**பூரியார் கண்ணும் உள.**

அருட்செல்வம் - பிறரிடத்துக் காட்டுகின்ற இரக்கம் என்னும் செல்வம்; செல்வத்துள் செல்வம் - எல்லாச் செல்வங்களுக்குள்ளும் சிறந்த செல்வம்; பொருட்செல்வம் - பொருளாகிய செல்வம்; பூரியார் கண்ணும் உள - தீயவர்களிடத்திலும் உள்ளது.

**2. நல்ஆற்றான் நாடி அருள்ஆள்க பல்ஆற்றான்**
**தேரினும் அஃதே துணை.**

நல்ஆற்றான் நாடி - நல்ல நெறியிலே ஆராய்ந்து; அருள் ஆள்க - இரக்கம் கொண்டவராக ஆகுக ; பல்ஆற்றான் - பல நெறிகளால்;

தேரினும் - ஆராய்ந்தாலும்; அஃதே துணை - அந்த இரக்கம் உடைமையே துணையாகும்.

3. அருள்சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை இருள்சேர்ந்த
இன்னா உலகம் புகல்.

அருள்சேர்ந்த நெஞ்சினார்க்கு - இரக்கம் உடைய மனம் கொண்டவர்க்கு; இல்லை - இல்லை ஆகும்; இருள்சேர்ந்து - இருள்நிறைந்த; இன்னா உலகம் புகல் - துன்பம் தரும் நரகத்தில் புகுதல்.

இருள் நிறைந்த துன்பம் தரும் நரக உலகத்தில் புகுதல் என்பது இரக்கம் உடைய மனம் கொண்டவர்க்கு இல்லை ஆகும்.

4. மன்உயிர் ஓம்பி அருள்ஆள்வாற்கு இல்என்ப
தன்உயிர் அஞ்சும் வினை.

மன்உயிர் ஓம்பி - நிலைத்த உயிர்களைப் பாதுகாத்து; அருள் ஆள்வாற்கு - இரக்க குணத்தை ஆள்பவனுக்கு; தன்உயிர் அஞ்சும் வினை - தன்னுடைய உயிர்க்கு அச்சம் தருவதாகிய வினைகள்; இல்என்ப - இல்லை என்று சொல்வார்கள்.

நிலைத்த உயிர்களைப் பாதுகாத்து இரக்ககுணத்தை ஆள்பவனுக்குத் தன்னுடைய உயிர்க்கு அச்சம் தருவதாகிய தீவினைகள் இல்லை என்று சொல்வார்கள்.

5. அல்லல் அருள்ஆள்வார்க்கு இல்லை வளிவழங்கும்
மல்லல்மா ஞாலம் கரி.

அருள் ஆள்வார்க்கு - இரக்க குணத்தை ஆள்பவர்க்கு; அல்லல் இல்லை - துன்பம் இல்லை; வளிவழங்கும் - காற்று இயங்கும்; மல்லல்மா ஞாலம் கரி - வளம் நிறைந்த பெரிய இந்த உலகமே சான்றாகும்.

இரக்க குணத்தை ஆள்பவர்க்குத் துன்பம் இல்லை; காற்று இயங்கும் வளம் நிறைந்த பெரிய இந்த உலகமே இதற்குச் சான்றாகும்.

6. **பொருள்நீங்கிப் பொச்சாந்தார் என்ப அருள் நீங்கி
அல்லவை செய்துஒழுகு வார்.**

பொருள் நீங்கி - அறத்திலிருந்து நீங்கி; பொச்சாந்தார் - அதனை மறந்தவர்; என்ப - என்று சொல்லுவர்; அருள்நீங்கி - இரக்கத்தில் நீங்கி; அல்லவை செய்து ஒழுகுவார் - தீயவற்றைச் செய்து வாழ்பவர்கள்.

இரக்கத்தில் இருந்து நீங்கித் தீயவற்றைச் செய்து வாழ்பவர்கள் அறத்திலிருந்து நீங்கி அதனை மறந்தவர் ஆவார் என்று சொல்லுவர்.

7. **அருள்இலார்க்கு அவ்வுலகம் இல்லை பொருள்இலார்க்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு.**

அருள்இலார்க்கு - இரக்கம் இல்லாதவர்க்கு; அவ்வுலகம் இல்லை - வீட்டுலகம் என்பது இல்லை; பொருள்இலார்க்கு - பொருள் இல்லாதவர்க்கு; இவ்வுலகம் - இந்த உலகத்துள்ள வாழ்வு; இல்லாகியாங்கு - இல்லை என்பது போல.

பொருட்செல்வம் இல்லாதவர்க்கு இந்த உலகத்து வாழ்வு இல்லை என்பது போல, இரக்கம் இல்லாதவர்க்கு வீட்டுலகம் என்பது இல்லையாம்.

8. **பொருள்அற்றார் பூப்பர் ஒருகால் அருள்அற்றார்
அற்றார்மற்று ஆதல் அரிது.**

பொருள்அற்றார் - பொருளில்லாத வறியவர்கள்; பூப்பர் ஒருகால் - ஒருகாலத்தில் செல்வத்தால் பொலிவர்; அருள்அற்றார் - இரக்கமில்லாதவர்கள்; அற்றார் - அனைத்தையும் இழந்தவர்கள் ஆவர்; மற்று ஆதல் அரிது - மீண்டும் ஆக்கமுடையவராதல் அரிதாகும்.

பொருளில்லாத வறியவர்கள் ஒருகாலத்தில் செல்வத்தால் பொலிவர்; ஆனால் இரக்கமில்லாதவர்கள் அனைத்தையும் இழந்தவர்கள் ஆவர்; மீண்டும் ஆக்கம் உடையவராதல் அரிதாகும்.

9. **தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேறின்
அருளாதான் செய்யும் அறம்.**

தெருளாதான் - அறிவில்லாதவன்; மெய்ப்பொருள் கண்டற்றால் - உண்மைப்பொருளைக் கண்டறிய முற்படுவதுபோல்; தேறின் - ஆராய்ந்தால்; அருளாதான் செய்யும் அறம் - இரக்கம் இல்லாதவன் செய்கின்ற அறம்.

இரக்கம் இல்லாதவன் செய்கின்ற அறத்தை ஆராய்தல் அறிவில்லாதவன் உண்மைப் பொருளைக் கண்டறிய முற்படுவதுபோல் ஆகும்.

**10. வலியார்முன் தன்னை நினைக்கதான் தன்னின்**
**மெலியார்மேல் செல்லும் இடத்து.**

வலியார்முன் - தன்னைவிட வலிமை உடையவர்களுக்கு முன்னால்; தன்னை நினைக்க - தனது வலிமைக் குறைவை நினைக்கவேண்டும்; தான் தன்னின் - தான் தன்னைவிட; மெலியார்மேல் - வலிமை குறைந்தவர்களிடம்; செல்லும் இடத்து - தன் வலிமையைக் காட்டும் இடத்தில்.

ஒருவன் தன்னைவிட வலிமை குறைந்தவர்களிடம் தன்வலிமையைக் காட்டும் இடத்தில், தன்னைவிட வலிமை உடையவர்களுக்கு முன்னால் தனது வலிமைக்குறைவை நினைத்துச் செயல்பட வேண்டும்.

தன்னைவிட வலிமை குறைந்தவர்களிடம் இரக்கம் காட்ட வேண்டும்.

*(தொடரும்...)*

## மடாலய நிகழ்வுகள்

28.10.2017 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் ஐயடிகள் காடவர்கோன், கணம்புல்லர், காரிநாயனார், நின்றசீர்நெடுமாறன், வாயிலார் நாயனார், முனையடுவார் ஆகியோர்பற்றி டாக்டர் பழனியம்மாள் பேசினார்.

**கோவிலூரில் நாச்சியப்ப சுவாமிகள் சிலை திறப்பு விழா**

கோவிலூர் மடாலயத்தில் பல்வேறு கல்வி நிலையங்களைத் தோற்றுவித்த பல சமூக நலப் பணிகளையும் ஆன்மீகப் பணிகளையும் செய்து கோவிலூர் மடாலயத்தை மக்கள் மடாலயமாக மாற்றிய 12ஆவது கோவிலூர் ஆதீனம் சீர் வளர் சீர் நாச்சியப்ப சுவாமிகளின் சிலை திறப்பு விழா கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் தலைமையில் 2.11.2017 அன்று நடைபெற்றது. கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரி வளாகத்தில் நிறுவப்பட்டுள்ள நாச்சியப்ப சுவாமிகளின் மார்பளவு உருவச்சிலையை மதுரை இராமகிருஷ்ணா மடத்தின் தலைவர் சுவாமி கமலாத்மானந்தா மகராஜ் திறந்து வைத்தார். பின்னர் நடைபெற்ற விழாவில் உடற்பயிற்சிக் கல்லூரி முதல்வர் டாக்டர் ரவீந்திரன் வரவேற்றார். கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் பேசுகையில் தமது குருநாதர் நாச்சியப்ப சுவாமிகள் 72 வயது வரை தாம் ஈட்டிய செல்வத்தையெல்லாம் அவர் ஆதீனகர்த்தராக வந்தபின் கோவிலூர் மடாலயத்திற்கு வழங்கிப் பல்வேறு கல்வி நிலையங்களைத் தொடங்கி, கல்விப்பணி, ஆன்மீகப்பணி, தமிழ்ப்பணி, சமுதாயப் பணி என பலவற்றைச் செய்து மடாலய வரலாற்றில் ஒரு திருப்புமுனையை ஏற்படுத்தியவர் என்றும், தான் வேதாந்தம் கற்கவில்லையென்றாலும் வேதாந்தியாக வாழ்ந்தவர் என்றும், மிக எளிமையானவர், தைரியமானவர். எந்த நிலையிலும் கலங்காதவர் எனவும் புகழாரம் சூட்டினார். அவரது விருப்பங்கள் ஒவ்வொன்றாக நிறைவேற்றப்பட்டு வருகின்றன என்றும் கூறினார்.

சிறப்புரை ஆற்றிய கமலாத்மானந்தா மகராஜ் பேசுகையில் இராமகிருஷ்ணா மடத்திற்கும் கோவிலூர் மடத்திற்கும் நீண்ட நெடுங்காலமாக உள்ள தொடர்பினைக் கூறினார். மேலும் மடாலயங்கள் ஞானதானம் வித்யாதானம் அன்னதானம் ஆகியவற்றோடு சமுதாயப் பணிகளையும் செய்ய வேண்டும். இப்பணிகளைக் கோவிலூர் மடாலயம் சிறப்பாகச் செய்து வருகிறது என்றார். மேலும் பேசுகையில் தெருவில் ஒரு பிணம். சென்றது. அப்பொழுது இது சந்நியாசிகள் இப்பிணமாக இருப்பவர் சொர்க்கத்திற்குச் செல்வாரா? என விவாதம் செய்தனர். அப்பொழுது அங்கிருந்த வீட்டுக்காரி வேலைக்காரி கருப்பாயியைக் கூப்பிட்டு இப்பிணமானவர் சொர்க்கத்திற்குச் செல்கிறாரா? நரகத்திற்குச் செல்கிறாரா? என அறிந்துவா என்றார். வேலைக்காரியும் பிணத்துடன் சிறிது தூரம் சென்றுவிட்டுத் திரும்பி வந்து அவர் சொர்க்கத்திற்குப் போவார் எனக் கூறினாள். இதுபற்றி விவாதித்த சந்நியாசிகள் ஆச்சரியமடைந்து எப்படி வேலைக்காரி கூறினாள் என்றனர். அதற்குப் பிணமாகச் செல்பவர் பல நன்மைகள் செய்தவர்; ஆகையால் மக்கள் அவரைப் பாராட்டிப்பேசி நல்ல மனிதர் சென்றுவிட்டாரே எனக் கூறினர். எனவே அவர் சொர்க்கத்திற்குச் செல்வார் எனக் கூறியதாகத் தெரிவித்தார். ஒவ்வொரு நாட்டுக்கும் ஒரு சிறப்புண்டு. இந்தியா ஆன்மீகப் பூமி எனும் சிறப்பை உடையது என்றார். வள்ளுவர் கூறிய தக்கார் தகவிலர் என்பது அவரவர் எச்சத்தால் காணப்படும் எனும் குறள்வழி நாச்சியப்ப சுவாமிகள் ஆற்றிய பணிகளைக் கொண்டு நாச்சியப்ப சுவாமிகள் தக்கார் ஆவார் எனக் கூறினார்.

பின்னர் உரையாற்றிய குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் நாச்சியப்ப சுவாமிகள் பல ஆன்மீக மாநாடுகளையும், சிலப்பதிகார மாநாடு, தொல்காப்பிய மாநாடு, குறள்விழா எனப் பலவற்றை நடத்தியவர் என்றும் அனைத்து நிகழ்வுகளிலும் குன்றக்குடி ஆதீனம் பங்கெடுத்துள்ளது என்றும் மக்கள் குடியரசுத் தலைவர் டாக்டர் ஏ.பி.ஜே. அப்துல்கலாம் வந்து பாராட்டிய மடாலயம் என்றும் நாச்சியப்ப

சுவாமிக்குப் புகழாரம் சூட்டினார். மேலும் பேசுகையில் விவேகானந்தர் அமெரிக்காவில் சிகாகோ நகரில் உள்ள கொலம்பஸ் அரங்கத்தில் உரையாற்ற நின்ற போது கூடியிருந்தோர் வேடிக்கை பார்த்தனர். அவர் சகோதர சகோதரிகளே எனக் கூறியவுடன் அரங்கமே அதிர்ந்தது. அது மனித நேயத்திற்கான அன்பின் முழக்கம், மதவெறிக்கு எதிரான முழக்கம், எல்லா மதமும் உயர்ந்தவை என்பதற்கான முழக்கம் எனப் பாராட்டினார். ஏழைகளை உயர்த்துகிற ஒரே வழி கல்வி தான் என்றார். கல்வி அறிவை மேன்மையாக்கும் அறிவு மனிதத்தை மேன்மையாக்கும். அன்பும் அறிவும் இணைந்தால் உலகம் மேல்மயமாகும். இவை முறிந்தால் உலகம் கீழ்மயமாகும். எனவே தான் அறிவிற் சிறந்த விவேகானந்தர் தமிழகம் வந்தபோது ராமநாதபுரம் ராஜா தேரில் காளைகளை அவிழ்த்துவிட்டு அவர் தேரை இழுத்தார். அத்தகைய சிறப்பு மிக்க கல்விப்பணியைச் செய்தவர் நாச்சியப்ப சுவாமிகள் என்றார். கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர் குமரப்பன் நன்றி கூறினார்.

கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள் டாக்டர் ரவீந்திரன், டாக்டர் செல்லப்பா, மாயாண்டி, திருமதி மணிமொழிமோகன், மணிமொழிமுருகன், மடாலய அறநிலை உறுப்பினர் ராமனாதன், எழுத்தாளர் அய்க்கண், முன்னாள் அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பதிவாளர் சபாரத்தினம், பேராசிரியர்கள் டாக்டர் முத்தையா, சுப்பிரமணியன் மற்றும் பிரமுகர்கள், ஆசிரியர்கள், மாணவர்கள் திரளாகப் பங்கு பெற்றனர். பேரா. கார்மேகம் நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்கினார்.



## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

### எல்லாம் வல்ல சித்தர் ஆனது

நவரத்தினங்கள் பதித்த மணிமுடி சூடிய அபிஷேக பாண்டியனும், பாண்டிய நாட்டில் இருப்பவர்களும் இகத்திலும் பரத்திலும் எல்லா வகையான நன்மைகளையும் அடையவேண்டும் என்று சோமசுந்தரப் பெருமான் திருவுள்ளம் கொண்டார். ஆதலால், சித்த புருஷரைப் போலத் திருவுருவங் கொண்டருளினார்.

நீண்ட சடைமுடியும் நெற்றியிலே திருநீறும், புலித் தோல் உடையும் தங்கம் கட்டிய பிரம்பு ஏந்திய திருக்கரமும் விபூதிப் பையும் விளங்க நல்ல அழகும் இளவயதும் கொண்ட சித்த புருஷராகத் தோன்றியருளினார் பெருமான்.

மதுரை மாநகரக் கடைவீதி, சித்திரக்கூடம், நாற் சந்தி, நிலாமுற்றம், மாளிகை, மாடம் திண்ணை ஆகிய எல்லா இடங்களிலும் தோன்றினார். தெற்கே இருப்பார் போலக் காட்டி வடக்கே இருப்பார். கிழக்கே தோன்றியிருந்து மேற்கே காட்சி தந்திடுவார். தேடத் தேடக்காணாதவராகித் திடீரென்று இந்திரஜாலம்போல மறைவார். வெகு தூரத்திலுள்ள மலையை வெகு அருகில் வரவழைப்பார். வயதானவர்களை வாலிபர்கள் ஆக்குவார். சிறியவர்களைக் கிழவராக்குவார், ஆண்களைப் பெண்களாக்குவார். பெண்களை ஆண்களாக்குவார். கூனர்கள், குருடர்கள், செவிடர்கள், ஊமைகள், முடவர்கள் எல்லாருடைய உடல் குறைகளையும் போக்கிச் சரியாக்கி விடுவார். இரும்பு, ஈயம், தாமிரம், வெள்ளி என்னும் நான்கு உலோகங்களையும் பொன்னாக மாற்றிவிடுவார். சித்தர் புரிந்து காட்டிய விளையாடல்கள் பலவகையானவை. ஆகர்ஷணம், அதிரிச்சியம், அஞ்சனம், வசியம், வாதம், புயஸ்தம்பம் ஆகியவற்றைச் செய்து காட்டினார். படிப்பே இல்லாதவருக்கு வாயிலே விபூதியைப் போட்டுப் பண்டிதராக்கி விடுவார். சகல லோகத்திலுள்ள பொருள்களையெல்லாம் மதுரைக்குக் கொண்டு வருவார். இப்படியாக

அளவிட முடியாத சித்து வித்தைகளை மதுரையம்பதியிலே புரிந்தருளினார். ஆணழகனான சோமசுந்தர சித்தமூர்த்தி திருவிளையாடல்களைக் கண்ட மதுரை மக்கள் பெரும் திகைப்பு அடைந்திருந்தார்கள்.

இந்தச் சித்த நிகழ்ச்சிகளையும் சித்தர் வல்லமையையும் தெரிந்துகொண்டான் அபிஷேக பாண்டியன். அருகேயிருந்த சேவகர்களை நோக்கி, வித்தகம் நிரம்பிய சித்தப்பெருமானை இங்கு அழைத்து வாருங்கள் என்று ஆணையிட்டான்.

ஆணைபெற்ற ஏவலாளர்கள் சித்தரிடம் சென்றார்கள். ஆனால், அங்கே சென்று அவர் செய்த திருவிளையாடலைப் பார்த்து ஆச்சரியம் அடைந்து தங்களையும் மறந்து அங்கேயே இருந்துவிட்டார்கள். வேலைக்காரர்கள் வராததைக் கண்ட பாண்டிய மன்னன் தன்னுடைய மந்திரிகளை அனுப்பி வைத்தான். மந்திரிமார்கள் சித்தரைக் கண்டு வணங்கினார்கள். சித்தர் பெருமானே ! தாங்கள் எங்கள் அரசர் முன்பு எழுந்தருள வேண்டும் என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டார்கள்; உங்கள் மன்னனால் எனக்கு ஒரு பிரயோசனமும் இல்லை நான் வர முடியாது என்று மறுப்புச் சொல்லி விட்டார் சித்தர். மந்திரிகளும் வணங்கி ஏமாந்த மனத்துடன் வந்த வழி திரும்பினார்கள். அரசனிடம்போய்ச் சித்தமூர்த்திகளின் பதிலைச் சொன்னார்கள்.

அபிஷேக பாண்டியன் இது கேட்டான். கடவுளின் திருவருள் பெற்று இக பர சுகங்களை வெறுத்த மகாவிஷ்ணு, பிரம்மா, இந்திரன் ஆகியவர்களையே மதிக்க மாட்டார்களே! பூவுலக அரசனாகிய என்னையா மதிப்பார்கள்? என்று மந்திரிமார்களிடம் சொல்லி விட்டுச் சும்மா இருந்தான்.



---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

– பதிப்பாசிரியர்